ஜன சக்தி மலர்—2

# சோஷியலிஸத்தின் சரித்திரம்



ப. ஜீவானந்தன்.

பாரதி, பிரசுராலயம்,
காரைக்குடி.

விலை] [அரையணா.

# சோஷியலிஸத்தின் சரித்திரம்

——:o·——

## 1. ஸோஷியலிஸ்ட் சிந்தனைகள்

மனிதன் இந்த உலகத்தில் தோன்றி இரண்டு லட்சம் வருஷங்கள் ஆயின. இந்தக் கால அளவு எனது கற்பனை என்று நினைக்காதீர்கள். விஞ்ஞானிகள் ஊகித்து நிர்ணயித்தது என்று சொல்லப்படுகிறது. ஆயிரக்கணக்கான வருஷங்களாக மனிதன் காட்டுமிராண்டித்தனத்தில் மூழ்கிக் கிடந்தான். சில ஆயிரம் வருஷங்களுக்கு முன்னால், அவன் நாகரீகத்தின் உதய காலத்தைக் கண்டான்.

நாகரீகம் உதித்தது. அதோடு சுய லாபச் சொத்துரிமையும் தோன்றிற்று. இதன் பலனாக உடையவன்—இல்லாதவன், ஆண்டை—அடிமை என்கின்ற வர்க்கப் பிரிவினைகளும் ஏற்பட்டன. சமூகத்தில் துன்பமும் துயரமும், அடிமைத்தனமும் கொடுங்கோன்மையும், இல்லாமையும் பொல்லாங்கும் தலைவிரித்தாடலாயின. அதர்மத்தை ஒழித்து, தர்மத்தை நிலைநிறுத்த மகாத்மாக்களும் தீர்க்கதரிசிகளும் பகீரதப் பிரயத்தனம் செய்ய வேண்டியதாயிற்று. சிஷ்டர்களைக் காக்கவும், துஷ்டர்களைத் தொலைக்கவும் வீராதி வீரர்களும் லோகோபகாரிகளும் விண்ணையும் மண்ணையும் புரட்ட நேர்ந்தது.

கிரேக்க நாட்டின் பேரறிஞராகிய பிளாட்டோ எழுதிய "ரிப்பப்ளிக்" (குடி அரசு) முதல், ஆங்கில அறிஞராகிய தாமஸ்மூர் எழுதிய "உட்டோபியா" (கற்பனாலோகம்) வரை உள்ள பல அருமையான நூற்கள் யாவும், சமூக வாழ்வில் காணப்படும் தாறுமாறான நடவடிக்கைகளைச் சுட்டிக் காட்டுகின்றன. சமூகக் கேடுகளை ஒழிப்பதற்குரிய பல யோசனைகளையும் அவைகள் கூறுகின்றன. சோஷியலிஸத்தின் அம்சங்களும் அவைகளில் அடங்கிக் கிடக்கின்றன என்பதும் வாஸ்தவம். ஆனால் அவைகளில் ஒன்றுகூட விஞ்ஞான ரீதியான சோஷியலிஸத்தை வரையறுத்துக் கூறவில்லை.

முதலாளித்வம் ஏற்பட்டது. அதனுடைய சம்பிரதாயங்களும் நடை முறைகளும் பரவின. சுய லாபச் சொத்துரிமை பெரும்பாலாருக்கு இல்லாமல் ஒழிந்தது. பண்டங்களை உற்பத்தி செய்வதற்கு அவசியமான சாதனங்கள் ஒரு சிலர் கையில் சிக்கின. உழைப்பு சக்தியை விற்று, பிழைப்பு நடத்துகிற ஒரு தொழிலாளி வர்க்கம் உதித்தது. இப்படிப்பட்ட தொழிலாளி வர்க்கம் தோன்றிய பிறகும், வளரத் தொடங்கிய பிறகுந்தான், சோஷியலிஸத்தைப் பற்றிய அம்சங்களும் வளர ஆரம்பித்தன. இதனால்தான் பட்டினியும் வர்க்க பேதமும் இல்லாத ஒரு சமூக அமைப்பைப்பற்றி, கனவு காணத் துணிவு கொண்ட தாமஸ்மூர், போற்றிப் புகழத் தக்கவராய் இருந்தபோதிலுங்கூட முதலாளித்வம் பிறக்கும் முன்னர் (கி. பி. 1516) அவருடைய "உட்டோபியா" பிரசுரிக்கப்பட்டதால், அது வெறும் கற்பனையாகவும் கதையாகவுமே போய்விட்டது.

அதற்குப் பின்னர், முதலாளித்வம் வளர்ந்து கொண்டே வந்தது. அதன் வளர்ச்சியின்—விகசிப்பின் போக்கின் ஒவ்வொரு சந்திப்பும் சமூக முன்னேற்ற அம்சங்களையும் அபிப்பிராயங்களையும் வளர்த்துக் கொண்டே வந்தன. 1640 முதல் 1660 வரை இங்கிலாந்தில் புரட்சி நடந்தது. அக்காலத்தில் நடந்த குழப்பங்களும் கிளர்ச்சிகளும் முதலாளித்வ வளர்ச்சிக்குப் பேருதவி செய்தன. அந்தப் புரட்சிகளால், சோஷியலிஸத்தின் பிறப்புக்கு, சமூகம் குண்டோட்டம் குதிரை யோட்டமாகச் சென்றது.

1770 க்கும் 1870 க்கும் இடையிலுள்ள காலம் முதலாளித்வ சகாப்தத்தில் மிகவும் குறிப்பிடத்தக்க காலம். இக்காலத்தில் முதலாளித்வம் துரிதம் அதி துரிதமாக வளர்ந்தது. அது பியூடல் பிரபுத்வத்தை மிதித்துத் துவைத்து கீழே அமிழ்த்திவிட்டு, முன்னால் வந்தது. மேற்கு ஐரோப்பாவிலும், வட அமெரிக்காவிலும் முதலாளித்வம் ஆணிவேர் அடித்து, அஸ்திவாரம் போட்டு விட்டது.

முதலாளித்வம் வளர வளர தொழிலாளிகளின் கஷ்ட நஷ்டங்களும் அதிகரித்தன. ஒரு பக்கத்தில் அநாவசியமாக, பயன்படா விதமாகச் செல்வம்—மனித வர்க்கத்தின் வாழ்க்கைக்கு இன்றியமையாத விளை பொருள்களும் செய் பொருள்களும்—மலை மலையாய்க் குவிந்து கிடக்கிறது. மற்றொரு பக்கத்தில் தங்களுடைய சதையை சாறுபிழிந்து உழைத்த உழைப்பின் பலனைத் தொடுவதற்கும் உரிமை இல்லாது பாட்டாளி மக்களான பெரும்பாலான ஜனங்கள், பரம தரித்திரத்திலும், கொடிய துயரத்திலும் கிடந்து

நரக வாதனைப்படுகிறார்கள். ஆதிக்க முடையோனுக்கும் அடக்கப்பட்டோனுக்கும், சுரண்டுவோனுக்கும் சுரண்டப் படுவோனுக்கும் இடையிலுள்ள வேற்றுமைகள் தொழிலாளிகளிடையில் வர்க்க உணர்ச்சியைக் கிண்டிக் கிளறி விட்டது. பியூடல் பிரபுக்களிடத்திலிருந்து முதலாளிகளால் பறிக்கப்பட்ட அரசியல் அதிகாரம் நியாயமான உரிமைக்காகப் போராடும் தொழிலாளர்களின் கிளர்ச்சிகளை மண்டையில் அடித்து நசுக்குவதற்குப் பேராயுதமாய்த் தீர்ந்தது. இதனால், தொழிலாளிகளின் கஷ்ட நிஷ்டூரங்கள் விஷக் கிருமிகள்போல் நாள்தோறும் வளர ஆரம்பித்தன.

அக்காலத்தில் ஏழை எளிய உழைப்பாளி மக்களின் கஷ்ட நிவாரணத்திற்காக பல பெரியார்கள் முன்வந்தனர். அவர்களில் சேயின்ட் ஸைமனும், போரியரும், ராபர்ட் ஓவனும் முன்வைத்து எண்ணத் தகுந்தவர்கள். இந்த மூன்று சிந்தனை சிற்பிகளும் சமூக அமைப்பில் காணப்பட்ட குற்றங் குறைகளை ஒழிப்பதற்காக பற்பல யோசனைகள் கூறினர்; திட்டங்கள் போட்டனர். ஆனால் அவர்களில் யாருக்கும் நடைமுதல் சமூக அமைப்பைத் தலைகீழாக மாற்றி அதன் ஸ்தானத்தில், அவர்கள் கனவு கண்டு கொண்டிருந்த லட்சிய சமூகத்தை ஸ்தாபிப்பதற்குரிய யாதொரு தெளிவான திட்டமும் அவர்களிடம் இல்லை. வரப்போகின்ற சோஷியலிஸ்டு சமூகத்தை கட்டுவதற்குரிய உபகரணங்கள் புரட்சிகரமான தொழிலாள வர்க்கத்தின் கைகளில்தான் இருக்கின்றன என்கின்ற உண்மையை அவர்களால் உணர்ந்துகொள்ள முடியவில்லை. முதலாளிகள் லாபத்தை இலட்சியமாகக் கொண்டு தொழிலாளி வர்க்

கத்தை அடக்கி ஒடுக்கிச் சுரண்டிக் கொண்டிருந்தனர். தொழிலாளி வர்க்கமோ முதலாளிகளின் சூரையாட்டத்தி லிருந்தும் அடக்குமுறையிலிருந்தும் விடுதலை அடைவதற் காகப் போராடிக் கொண்டிருந்தது. ஆனால் தங்களு டைய உண்மையான லட்சியம், திட்டம், மார்க்கம் இவை களைப் பற்றிய தெளிவான உணர்ச்சி தொழிலாளி வர்க்கத் திற்கு இல்லாதிருந்தது.

## 2. விஞ்ஞான சோஷியலிஸம்

நிலைமை இப்படி இருக்கும்பொழுதுதான் காரல் மார்க்ஸ், எங்கல்ஸ் என்கின்ற இரண்டு வாலிபர்கள் தங்க ளுடைய ஆழ்ந்த அறிவாலும், விரிந்த ஆராய்ச்சியாலும் கண்ட முடிவுகளுடன் முன்னால் வந்தார்கள். பிரான்சி லும் ஜெர்மனியிலும் அதுபோல் இதர தேசங்களிலும் தோன்றிய சோஷியலிஸ்டு சிந்தனையாளர்களின் விலை உயர்ந்த அனுபவங்களையும் ஆராய்ச்சிகளையும் பின்பலமாகக் கொண்டு மார்க்ஸும் எங்கல்ஸும் ஒன்று சேர்ந்து சோஷி யலிஸத்திற்கு விஞ்ஞான ரீதியான உருவம் கொடுத்தனர். அதுவரையில் சோஷியலிஸம் கற்பனா லோகத்தில் சங் கற்ப மாத்திரையாகவே சஞ்சாரம் செய்து வந்தது.

ஆனால், என்று சோஷியலிஸம் மார்க்ஸ் எங்கல்ஸா கிய மகா மேதைகளின் கையில் சிக்கியதோ, அன்றே அது உலக வாழ்விற்கு உகந்த, கிரியாம்சைக்குத் தகுந்த, வன் மையான சக்தி வாய்ந்ததாக மாறிவிட்டது. 1848-ல் அவர்கள், அதற்கு ஒரு வருஷத்திற்கு முன்னால் ஸ்தா பிக்கப்பட்ட கம்யூனிஸ்டு லீகின் திட்டப்படி "கம்யூனிஸ்டு

அறிக்கை'' என்ற ஒரு செந்நூலை—பொன்னூலை—நன்னூலை—நவயுவ உதயத்தின் சுக்கிரனாகச் சுடர்விடும் சிறிய நறுநூலை பிரசுரித்தார்கள். அந்தச் சின்னஞ் சிறிய நூல், மனித வர்க்கத்தின் சிந்தனாலோகத்தில் ஒரு பென்னம் பெரிய பிரளயத்தை உண்டுபண்ணிவிட்டது. அதைப் பற்றி மார்க்ஸின் மாணாக்கர்களில் மகா உத்தமனான லெனின் கி. பி. 1914-ம் வருஷத்தில் பின்வருமாறு எழுதியிருக்கிறார் :

" ஒரு மகாத்மாவின் ஸ்பஷ்டமும் உத்க்ருஷ்டமும் நிறைந்த இந்த நூல், உலகத்தைப் பற்றியுள்ள புதிய சித்தாந்தங்களையும் கோட்பாடுகளையும் நமக்கு விவரமாக விளக்கிக் காட்டுகின்றது. சமூக வாழ்வு முழுவதையும் பாதிக்கின்ற ஒரு சரியான (உலோகாயுத) வாதத்தின் தகுந்த பிரதிநிதியாக அது காணப்படுகிறது. மாறுதலின் போற்றத்தகுந்த துள்ளியமான உன்னத சித்தாந்தம் தான் டைலடிக்கல் லோகாயுத வாதம் (Dialectical Materialism) என்று அது பகிரங்கப்படுத்துகிறது. வர்க்கப் போராட்டத்தின் தத்துவங்கள் எவை எவை என்று அது நமக்குப் படிப்பித்துக் கொடுக்கிறது. ஒரு புதிய கம்யூனிஸ்டு சமுதாயத்தினுடைய சிருஷ்டிகர்த்தா என்ற அளவிற்கு தொழிலாளி வர்க்கத்திற்குள்ள சரித்திரபூர்வமான பிரதான அந்தஸ்தை அது நமக்குத் தெளிவுபடுத்துகின்றது."

கிட்டத்தட்ட ஒரு நூற்றாண்டிற்கு முன்னால் எழுதப்பட்ட போதிலுங்கூட இந்த கம்யூனிஸ்டு அறிக்கை நாம் வாழ்கிற இந்தக் காலத்திற்காக வேண்டி, பிரத்தி

யேகமாக எழுதப்பட்டதுதானோ என்று பல தடவையும் நினைக்கும்படியாக இருக்கிறது!

1848-ல் முதலாளித்துவம் அதன் பால்ய தசையில் இருந்தது. பியூடல் பிரபுத்வத்தின் சக்தி அன்று முழுக்க முழுக்க நசித்துப் போய்விடவில்லை. அப்பொழுது பியூடல் பிரபுத்வத்திற்கு உயிரும் அதற்குகந்த உடைமையும் இருந்தது. அதோடு அரசர்களின் ஆதிக்கமும் தாண்டவமாடிற்று. ஆகவே, "முடி அரசின் எதேச்சாதிகாரத்தை அடித்து உடைப்பதற்கு, முன்னால் வருகிற முதலாளி வர்க்கத்திற்கு தொழிலாளி வர்க்கம் அவ்விஷயத்தில் உதவி புரியவேண்டும். தற்பொழுது சோஷியலிஸ்டுகளுடைய அவசர லட்சியம் ஒரு தொழிலாளர் புரட்சி அல்ல. முதலாளித்வ பூர்வமான ஒரு ஜனநாயகப் புரட்சிதான்" என்று மார்க்ஸ் தெளிவாக எடுத்துக் காட்டினார். தொழிலாளர் புரட்சி உண்மையில் முதலாளித்வ ஜனநாயகப் புரட்சியின் ஓர் தொடர்ச்சி மாத்திரமே.

மார்க்ஸினுடைய காலத்திற்கு முன்னால் சோஷியலிஸத்தைப் பற்றிக் கூறப்பட்ட கருத்துக்கள் கற்பனைகளேயன்றி விஞ்ஞான ரீதியானவையல்ல. மார்க்ஸின் காலத்திலேயே விஞ்ஞான ரீதியான சோஷியலிஸத்திற்கு எதிராக பற்பல சோஷியலிஸங்கள் முளைத்தன. கிருஸ்துவ சோஷியலிஸம், யதார்த்த சோஷியலிஸம், இத்யாதி இத்யாதி. சாஸ்திரீயமற்ற மேற்கூறிய நானாவித சோஷியலிஸத்தின் சித்தாந்தங்களை மார்க்ஸ் அக்கு வேறு அலக்கு வேறாக பிய்த்தெறிந்து அவைகளைத் தலை தாழ்த்தும்படி

செய்தார். சோஷியலிஸத்திற்கு எதிராக உள்ள போலி வேஷங்களையும் மாயா வாதங்களையும் அவர் தனது கண்டன குடாரத்தால் சிதற அடித்தார்.

முதலாளித்வம் தேசிய எல்லைகளைத்தாண்டி வளர்ந்தது. கால எல்லையையும் கடந்து துரிதமாகப் பரவிற்று. இவ்வாறு உலக ரீதியாகப் பரவிய முதலாளித்வத்தை எதிர்த்து முறியடிக்க வேண்டுமானல் சர்வதேச ரீதியாக ஒரு சங்கம் சோஷியலிஸ்டுகளுக்கு அவசியமாய் இருந்தது. இவ்வுண்மையை மார்க்ஸ் தெள்ளத்தெளிய உணர்ந்தார். அதன் பலனாக 1864ல் சர்வதேசத் தொழிலாளர் சங்கம் ஏற்பட்டது. சோஷியலிஸ்டுகள் விஞ்ஞான ரீதியாக எப்படி சங்கம் சேரவேண்டும் என்ற அனுபவம் அந்த சங்கத்தின் மூலம் கிடைத்தது. அப்படிக்கிடைத்த 10 வருட அனுபவத்தின் பலன்தான் 1863ல் நிறுவப்பட்ட ஒன்றாவது இன்டர்நேஷனல்.

மார்க்ஸ் காலத்தில் நடந்த முக்கிய சம்பவம் 1871ல் நடந்த பிரெஞ்சுப் புரட்சி. புரட்சிக் காலத்தில் சோஷியலிஸ்டுகளுடைய நடவடிக்கைகள் எவ்வாறு இருக்கவேண்டுமென்று மார்க்ஸ் வெகு தெளிவாக விளக்கிக் காட்டினர். அந்த உலகப்பிரசித்திப்பெற்ற பிரெஞ்சுப்புரட்சியிலிருந்து தொழிலாளர் ஆட்சியின் ஒரு சிறு உதாரணமாக "பாரிஸ் கம்யூனை" கண்கூடாகக் காண முடிந்தது. அந்த பாரிஸ் கம்யூனை ஆதாரமாகக் கொண்டுதான் பின்னல் ரஷ்யாவில் லெனின் சோவியத்துகளை ஸ்தாபித்தார் என்பதை நாம் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும்.

ஒவ்வொரு தேசத்திலும் முதலாளித்வம் வளர்ந்து வந்தது. அதை ஒத்து சோஷியலிஸ்டுகளுடைய சக்தியும் விருத்தி அடைந்து வந்தது என்று கூறுவது மிகையாகாது. ஜெர்மனியில் 'சோஷியல் டெமாகிரடிக்' கட்சி ஏற்பட்டது. இங்கிலாந்தில் பேபியன் சோஷியலிஸ்டு சங்கமும், தொழிலாளர் கட்சியும் தோன்றின. ரஷ்யாவில் 'சோஷியல் டெமாகிரடிக்' கட்சி உதித்தது. அதேமாதிரி பிரான்சிலும் இதாலியிலும், ஆஸ்டிரியாவிலும் சோஷியலிஸ்டுப் பார்ட்டிகள் பிறந்தன. இவைகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு தினுசாக வேலை செய்து வந்தன. இவ்வாறு சிந்திச் சிதறிக்கிடந்த சோஷியலிஸ்டு சக்திகளை, உருட்டித் திரட்டி ஒன்று படுத்துவதற்காக 1889ல் பாரிஸ்மாநகரத்தில் ஒரு மகாநாடு நடந்தது. அந்த மகாநாட்டில்தான் இரண்டாவது இன்டர்நேஷனல் புனர் ஜென்மமெடுத்தது.

ஆனால், அரதிருஷ்ட வசத்தால் பத்தொன்பதாம் நூற்றாண்டின் முடிவு காலத்தில் சில சோஷியலிஸ்டுத் தலைவர்கள் மார்க்ஸிஸத்தை (மார்க்ஸினுடைய மூலாதாரக் கொள்கைகளை) திருத்தி எழுதப் புறப்பட்டார்கள். லாஸ்ஸேலியி என்பவர் ஒரு பிரசித்திபெற்ற சோஷியலிஸ்டு. அவர் ஒரு ஜெர்மானியர். ஜெர்மானிய தொழிலாளர் சங்கம் ஒன்றை நிறுவினார். பக்குவமற்ற தனது தீர்மானங்களின் காரணமாகவும் மார்க்ஸிஸத்தின் பொருளாதார, தத்துவ முடிவுகளையும், புரட்சியில் தொழிலாளர் வர்க்கத்திற்குரிய ஸ்தானத்தையும் தெளிவாக உணர்ந்துகொள்வதற்குரிய சக்தி அவருக்கு இல்லாமற் போயிற்று. ஆகவே அவர் முடிவில்

பிஸ்மார்க்கின் 'அரசாங்கப் பல' கொள்கைகளை ஆதரிப்பவ ராக மாறினர்.

இந்த "திருத்தி எழுத்துக்காரர்களில்" மிக முக்கி யஸ்தராகிய எட்வர்ட் பேர்ண்ஸ்டீனுடைய அபிப்பிராயங்க ளும், இங்கிலாந்திலுள்ள பாபியன் சோஷியலிஸ்டுகளுடைய அபிப்பிராயங்களும் பரஸ்பரம் நெருங்கிய சம்பந்தம் உள் ளவைகளாய் இருந்தன. முதலாளித்வ சமூகத்தில் அடிக் கடி குழப்பங்களும் கலகங்களும் புரட்சிகளும் உற்பவிக்க நேருமென்றும், முதலாளித்வத்தின்கீழ் தொழிலாளி வர்க் கத்தின் வாழ்வு, நாளேற நாளேற அதிகப்படியான கஷ்ட நஷ்டங்களுக்கு இரையாக வேண்டிவரும் என்றும் மார்க்ஸ் கண்டறிந்த உண்மைகளை அவர்கள் கடுமையாக எதிர்த்தார் கள். முதலாளித்வம் தினே தினே வளர்ந்து வருகிற தென்றும், அது வளர வளர தொழிலாளர்களுடைய நில மையும் அதிகப்படியாகச் சீரடையுமென்றும் அவர்கள் வாதித்தார்கள். தொழிலாளி வர்க்கம் அசையாத உறுதி யான மகாபலம் பொருந்திய ஒரு ஸ்தாபனத்தின் கொடி யின்கீழ் நின்று தங்களுடைய சத்துருக்களிடம் இருக்கும் அரசியல் அதிகாரத்தை கையைத் திருகிப் பிடுங்க வேண்டு மென்பதுதான் மார்க்ஸின் கொள்கை. அதற்குப் பதி லாக மேற்கூறிய "பிரகஸ்பதிகள்" பார்லிமெண்டுகளுக் கும் சட்டசபைகளுக்கும் சென்று வாதப் பிரதிவாதம் செய்து, மெள்ள மெள்ள, கொஞ்சம் கொஞ்சமாக சோஷி யலிஸத்தை ஸ்தாபிப்பதுதான் முறை என்றும், அதுதான் தங்களுடைய லட்சியமென்றும் அறுதியிட்டு உறுதிப்படுத் திப் பிரசாரம் செய்து வந்தனர். முற்போக்கான தேசங்க

ளின் தொழிலாளிகளிடம் தற்காலிகமாக காணப்படுகிற அமைதி, முதலாளி வர்க்கம் இதர பிற்போக்கான தேசங்களை காலனிகளை ஆக்ரமித்து அடிமைப்படுத்தி கொடுமையாகச் சுரண்டி வருவதில் ஒரு சிறு பகுதியை தங்கள் தேசங்களின் தொழிலாளர்களுக்குக் கொடுப்பதால்தான் என்றும், இந்த நிலைமை நீண்டநாள் நீடித்திருக்காதென்றும் அவர்களால் உணர்ந்துகொள்ள முடியவில்லை.

இத்தகைய பிற்போக்கும் புரட்சி எதிர்ப்பு மனோபாவமும் கொண்ட தலைவர்கள்தான் இரண்டாவது இன்டர்நாஷனலில் பிரமுகர்களாக விளங்கினார்கள். இவர்களுடைய பிற்போக்கு, கொள்கைத் துரோகம், சமய சஞ்சீவித் தன்மை, புரட்சி எதிர்ப்பு மனோபாவம் ஆகிய 'அனந்த கல்யாண' குணங்களும் 1914ல் ஏற்பட்ட மகாயுத்தத்தின் போது, பொத்துக்கொண்டு வெளிவந்து பூர்ணமாக காட்சி அளித்தன. குழப்பங்களும் யுத்தங்களும் முதலாளித்துவத்தின் விஷமத்தனமான விளைவுகள் என்று உணர்ந்து பொதுமக்களிடையே பிரச்சாரம் செய்வதற்குப் பதிலாக முதலாளிகளின் பணப்பைகளை கொழுப் பேற்றும் பொருட்டு ஏழை எளிய மக்களை கூட்டுக்கொலை செய்வதில்—யுத்தகளத்திற்கு அனுப்புவதில் முதலாளிகளோடு அவர்கள் ஒத்துழைத்தனர். அவர்கள் "தங்களுடைய முதலாளிமார்களின் அரசாங்கங்களை" இரட்சிக்கும் பொருட்டு வர்க்கப் போராட்டத்தையும், ஏகாதிபத்ய யுத்தத்தை உள்நாட்டுச் சண்டையாக மாற்றி, தொழிலாளி வர்க்கத்தின் அரசியல் அதிகாரத்தை ஸ்தாபிக்க வேண்டும் என்கின்ற மகத்தான லட்சியத்தையும் காற்று வாக்கில் பறக்க

விட்டுவிட்டார்கள். ரஷ்யா ஒன்றில் மட்டுமே இந்தத் தவறு நடவாதிருந்தது. லெனினுடையவும் போல்ஷ்விக் கட்சியினுடையவும் வீரதீரத் தலைமையின்கீழ் நின்று அங்குள்ள தொழிலாளி வர்க்கம் போராடி, 1917-ல் அரசியல் அதிகாரத்தைக் கைப்பற்றினார்கள். அவ்வாறு செய்து உலகத்தின் ஆறில் ஒரு பங்கு நிலப் பரப்பில் சோஷியலிஸத்தை நிர்மாணிப்பதற்கான அஸ்திவாரக் கல்லையும் நாட்டினார்கள். அதிக காலம் தாமதிக்காமல் லெனினுடைய தலைமையின் கீழ் 1919-ல் இரண்டாவது இன்டர் நாஷனலினுடைய பேடித்தன்மையிலிருந்து உலகத் தொழிலாளர் வர்க்கத்தை விடுதலை செய்வதற்காக மூன்றுவது இன்டர்நேஷனல் ஸ்தாபிதமாயிற்று.

ஆனபிறகும், ரஷ்யப் போல்ஷ்விக் கட்சி அளித்துள்ள படிப்பினைகளை முன்நிலையில் கண்ட பிறகும், சோஷியல் டெமோகிராட் தலைவர்கள் சரியான, முறையான ஓர் புரட்சிக் கொள்கையை அங்கீகரிக்க ஒருப்பட்டார்களில்லை. 1918-ம் வருஷத்தில் ஜெர்மனியிலுள்ள அரசியல் அதிகார வர்க்கம் க்ஷீணித்து விழுந்து கிடந்தது. அந்தச் சமயத்தில்கூட மேற்கூறிய தலைவர்கள் தொழிலாளர் வர்க்கத்தின் அதிகாரத்தை ஸ்தாபிக்க முற்படவில்லை. பதிலாக, பழைய உளுத்து இத்துப்போன முதலாளிகளின் ஆட்சிக்கு மறுபடியும் உயிர் கொடுக்க வேண்டுமென்றேதான் தீர்மானித்தார்கள். அன்று அவர்கள் செய்த பெரும் பிசகின் கொடிய விளைவுதான் இன்றைய பயங்கரமான ஐரோப்பா. ரஷ்யாவைப்போல சோவியத் ஆட்சியை ஸ்தாபிப்பதற்குக் கிடைத்த அந்தப் பொன்

ஞன சந்தர்ப்பத்தை அவர்கள் ரத்தக்களறியில் மூழ்கடித்ததின் பலன்தான் இன்றுள்ள ஹிட்லரின் உக்ரமான வெறி பிடித்த பாஸிஸ்டு எதேச்சாதிகாரம். முடிவாக, ஹிட்லர் அதிகாரத்திற்கு வருவதை எதிர்ப்பதற்கு வேண்டி ஜெர்மனியிலுள்ள தீவிரவாதிகள் எல்லோரும் ஓர் ஐக்கிய முன்னணியாய் நின்று போராடவேண்டியது அவசியம் என்று உணர்ந்து, அங்குள்ள கம்யூனிஸ்டுக் கட்சியார் விடுத்த தோழமை அழைப்பைகூட மேலே சொன்ன 'பெரிய மனிதர்கள்' மறுத்துவிட்டார்கள். அதன் பலன்தான் ஜெர்மனியில் முதலாளித்வத்தின் மிகவும் குரூரமான, ரொம்பவும் கொடியதான, மகா கொடுமை நிறைந்த நிலைமையாகிய பாஸிஸ்டு ஆட்சி நடைபெறும்படியான நிலைமை ஏற்பட்டது.

உலகத்தின் எல்லா பக்கங்களிலும் பாஸிஸம் நீட்டிக் கொண்டிருக்கிற விஷக் கொடுக்குகளை அறுத்தெறிவதும், பாஸிஸம் வருவிப்பதற்கு முயற்சித்துக்கொண்டிருக்கிற இரண்டாவது உலக மகாயுத்தத்தை எல்லா சக்திகளையும் உபயோகித்து தடுப்பதும்தான் மூன்றாவது இண்டர்நாஷனலுடைய இன்றைய அவசர அவசிய திட்டம். புரட்சிகரமான இந்தத் திட்டத்திலிருந்து பிறந்ததுதான் சிறிது காலத்திற்கு முன்னால் பிரெஞ்சு தேசத்தில் ஏற்பட்ட 'பொதுஜன முன்னணியின் ஆட்சி' (பாபுலர் பிரண்ட் சர்க்கார்). இன்று ஸ்பெயினில் கலகக்காரர்கள் கைப்பற்றிய இடங்கள் போக மற்ற பாகங்களில் நடைபெறும் ஆட்சியும் அத்தகைய பொதுஜன ஆட்சியே. மூன்றாவது இண்டர்நாஷனலும், பற்பல இடங்களிலிருக்கும்

அதனது தோழர்களும், பாஸிஸத்தையும் யுத்தத்தையும் எதிர்த்து இடைவிடாது ஜனநாயகத்திற்காகவும் சமாதானத்திற்காகவும் பகீரதப்பிரயத்தினம் செய்யாதிருந்திருந்தால், உலகம் இதற்கு எவ்வளவு நாட்களுக்கு முன்னதாகவோ மனித வர்க்கத்தின் சூடான ரத்த வெள்ளத்தில் அமிழ்ந்து போயிருக்கும்.

மார்க்ஸும் எங்கல்ஸும் தங்களுடைய ஆழ்ந்த அபிப்பிராயங்களையும், ஆராய்ச்சிமிக்க முடிவுகளையும் வெளியிட்ட காலத்தில் முதலாளித்வம் போதுமான அளவு வளர்ச்சி அடையவில்லை என்று கூறியிருக்கிறோமல்லவா? அதற்குப் பின்னால்தான் உலக முழுவதையும் ஆக்ரமிக்கவும், பிற்போக்கான தேசங்களை காலனிகளாக்கவும் (குடியேற்ற நாடுகளாக்கவும்) முதலாளித்வம் ஒன்றுபட்டுப் புறப்பட்டது. முதலாளித்வத்தின் இந்த புதிய ரூபம்தான் ஏகாதிபத்யம். ஏகாதிபத்யத்தினுடைய நடவடிக்கைகளைப் பற்றி லெனின் மிகத் தெளிவாக விளக்கியிருக்கிறார்.

அரசியல் அதிகாரத்தைக் கைப்பற்றியவுடனே தொழிலாளி வர்க்கம் கைக்கொள்ள வேண்டிய சர்வாதிகாரத்துவத்தையும் அவர் மிக அருமையாக வேண்டிய மட்டும் விவரித்து எழுதியிருக்கிறார். லெனின் மார்க்ஸிஸத்தை ஏகாதிபத்ய நிலைமைக்குப் பொருந்திய விதத்தில் பிரயோகித்திருக்கிறார். மார்க்ஸிஸத்தின் வளர்ச்சியே லெனினிஸம். ரஷ்யாவில் அனுஷ்டானத்திற்கு வந்துவிட்ட லெனினுடைய சித்தாந்தங்கள் உலக முழுவதிலுமுள்ள ஏழை எளிய மக்களுக்கு அடக்குமுறை

யிலிருந்தும், சூரையாட்டத்திலிருந்தும் விடுதலை பெறுவதற்கான நேர் வழியை காட்டிவிட்டன.

1924-ல் லெனின் காலஞ்சென்ருர். அவருக்குப் பின் அவருடைய புரட்சி வாழ்க்கைத் தோழராகிய ஸ்டாலின், சுற்றுமுற்று முள்ள முதலாளித்வ தேசங்களுடைய எதிர்ப்புகளேயும், லெனினிஸத்தை திருத்தி எழுத முயற்சித்த சில ரஷ்யத் தலைவர்களின் எதிர்ப்புகளேயும் பொருட்படுத்தாமல், எத்தகைய பதட்டமும் கொள்ளாமல், சோஷியலிஸத்தை பரிபூர்ணமாக நடைமுறையில் கொண்டுவர முயற்சித்தார். ஒன்ருவது ஐந்து வருடத் திட்டம், இரண்டாவது ஐந்து வருடத் திட்டம், ஸ்டாக்கனேவ் திட்டம், பட்டினி ஒழிப்பு, வேலையில்லாத் திண்டாட்ட ஒழிப்பு, கல்வித்துறையில் மகத்தான அபிவிருத்தி, நாகரீகத்தின் அமோக வளர்ச்சி, சமாதானம் தோழமை உணர்ச்சியின் நறுமலர்ச்சிகள்—அதாவது இன்று சோவியத் ரஷ்யாவைப் பொறுத்தவரையில் சோஷியலிஸம், மனோராஜ்யமாகவல்ல நடை முதல் வாழ்வின் யதார்த்த உண்மையாகப் பிரகாசிக்கிறது.

---

## :: தமிழ்நாடு சோஷியலிஸ்ட் பிரசுராலய வெளியீடுகள் ::

1. சோஷியலிஸ்ட் பாடல்கள்
2. சோஷியலிஸத்தின் சரித்திரம்
3. வர்க்கப் போராட்டம்
4. ரஷ்யப் புரட்சி
5. கிருபாட்கின் இளைஞர்களுக்கு விடுத்த வேண்டுகோள்
6. சோஷியலிஸ்ட் கதைகள்

---

ஸ்டாலின், லெனின், ஜவஹர்லால் நேரு, சுபாஷ் சந்திர போஸ், முத்துராமலிங்கத் தேவர், ஜீவானந்தம் ஆகியோர் படங்களும் விற்பனைக்குத் தயார்.

---

கிடைக்குமிடம் :

**தமிழ்நாடு சோஷியலிஸ்ட் லிட்ரிச்செர் பப்ளிஷிங் ஹவுஸ்,**

270, திருவல்லிக்கேணி ஹைரோடு, சென்னை.

---

Printed at the Jesu Press, Triplicane, Madras
and Published by Tamilnad Socialist Literature Publishing House,
270, Triplicane High Road, Madras.